




# அருள்மிகு
# இரெட்டியப்பட்டி
# ஆண்டவர் கவசம்

பிரமு அம்மாள் நினைவு வெளியீடு : 1

## அருள்மிகு
## இரெட்டியப் பட்டி

# ஆண்டவர் கவசம்

அறநெறியண்ணல்

பழநியப்பனார் பிரமு அம்மாள்
அறக்கட்டளை

முதற் பதிப்பு] மதுரை [1992

# சற்குருநாதர் வரலாறு

(தவமிகு வித்துவான் சு. மங்கயர்க்கரசி அம்மையார்)

பூவுலகின் கண் வாழும் உயிர்கள் இறவாப் பெருநிலை அடையவேண்டும் என்பதே எல்லாச் சமயங்களின் பொது நோக்காகும். அவ்வக் காலத்துக்குப் பொருத்தமான முறையில் அவ்வப் போது திரு அவதாரம் செய்த மகான்கள் போதனை செய்துள்ளார்கள். அம்முறையில் அவதாரம் செய்து உலகம் உய்ய அருள் நெறியாம்"சட்டம்" வகுத்து வழங்கியவர் இரெட்டியப் பட்டி சுவாமிகள்.

புண்ணிய பூமியாம் பாரத நாட்டில் பொலிவுற்று விளங்கும் பாண்டிநாடு தொன்று தொட்டு சான்றோர்களை நாட்டுக்கு ஈந்த பெருமை உடையது. அந்நாட்டின் தலை நகரம் மதுரை மாநகரின் தெற்கே 70 கி.மீ. தூரத்தில் உள்ள இருடியர்பட்டி என்னும் திருத்தலமே சுவாமிகள் அவதாரம் செய்த புண்ணிய பூமியாகும்.

சக்தி பூசையாற்றும் சைவ வேளாளர் குடியில் வீரபத்திரப்பிள்ளை-ஆவுடையம்மாள் என்ற இருவரும் அன்பும், அறமும் பண்புறப் பேணி இல்லறம் நடத்தி இருமூன்று மகவை ஈன்றபின் ஏழாவது திருமகனாக சுவாமிகள் கலியுகம் 4957 நள ஆண்டு புரட்டாசித் திங்கள் 2-ஆம் நாள் (16-9-1856) இரேவதி விண்மீனில் திருஅவதாரம் செய்தார்கள். விளையும் பயிர் முளையிலே தெரியும் என்ற முதுமொழிப் படி அருட் குழந்தை யின் முகப் பொலிவைக் கண்டு, பெற்றாரும், உற்றாரும், மற்றாரும் ஊராரும் எய்திய மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. சுப்பிரமணியம் என்ற திருநாமம் சூட்டினர்.

உரிய வயதில் சுப்பிரமணியம் பள்ளியில் சேர்க்கப் பெற்றார். உலகிற்கே அருட்பாடம் புகட்ட வந்தவர் விரைவில் எழுதப் படிக்கக் கற்றனர். சுவாமிகள் பாடிய பாடல்கள் அவர் ஓதாதுணர்ந்த மாண்பினை உணர்த்தும். குலத் தொழிலாகிய விவசாயத்தில் ஈடுபட்டார், நிலம் பன் மடங்கு விளை வைத் தந்தது.

"விண்ணின்று பொய்ப்பின் விரி நீர் வியனுலகத் துண்ணின் றுடற்றும் பசி" என்னும் வள்ளுவர் வாய்மொழிக்கேற்ப மழையின்மையால் பஞ்சம் ஏற்பட்டது. ஏழை மக்கள் போதிய உணவின்றி வருந்தினர். இரக்கமில்லா வணிகர்கள் அயலூரில் உணவு தானியங்கள் வாங்கி வந்து அதிக லாபம் வைத்து விற்பதைக் கண்டு, தாமே சென்று உணவுப் பொருட்களை வாங்கி வந்து, கொள்முதல் விலைக்கே விற்று உதவினார். வீட்டார் வெறுத்தனர். பின் இவர் காணப்போகும் சமயப் பொது நெறிக்கு, அன்று அது விதை ஊன்றப் பெற்றதுபோலாயிற்று.

பாண்டிய நாட்டின் தலை நகராம் மதுரைக்கு வந்து அங்கயற்கண்ணி அம்மையின் அருள் பெற்று, அம்மையின் திருக்கோயிலுக்கு அண்மையில் உள்ள முகமதியர் கடையொன்றில் கணக்கராய்ப் பணியாற்றினார். அண்ணலார் நாள் தோறும் விடியல் மூன்று மணிக்கே எழுந்து வைகை நதிக்கேகி நீராடி திருக்கோயில் சென்று முன்னவனார் வழிபாடு செய்து தியானத்தில் அமர்வார். ஒரு நாளும் இக்கடமை யிலிருந்து வழுவிய தில்லை. "பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தம் தம் கருமமே கட்டளைக்கல்" என்ற பொன் மொழிப்படி சுவாமிகளின் சீரிய வாழ்வு மதுரை மக்களின் உள்ளத்தை ஈர்ந்தது. சுப்பிரமணியம் என்ற பெயர் மாறி சுவாமிகள் குறித்து ஊர் பெயரும் உடன் சேர்த்து 'இரெட்டியப் பட்டி சுவாமிகள்' என்ற திருப் பெயரை மதுரை மக்கள் சூட்டினர். அத்திருப்பெயரே இன்றளவும் சுவாமிகளுக்கு நிலைத்து நிற்கின்றது. இனியும் நிற்கும்.

முன்வினைப் பயனால் திருமணம் நடைபெற்றது. இராமகிருட்டின பரமகம்சர், இராமலிங்க வள்ளல் போன்றே சுவாமிகளும் இல்வாழ்வில் ஈடுபடவில்லை. அஃதும் நம் நல்வினைப் பயனே.

'தொட்டுக் காட்டாத வித்தை சுட்டுப் போட்டாலும் வாராது' என்பது பழமொழி,' குருவாய் வருவாய் அருள்வாய் குகனே' என்றார் அருணகிரியார். சுவாமி களும் எங்கும் நிறைந்த ஓங்கார பரம் பிரமமாம் விநாயகப் பெருமானையே தம் குருவாக ஏற்று உள முருகி காட்சி காணத் துடித்தார். அழுதார். அரற்றினார். அவர் தம் அருட்பாடல்களே இதற்குச்

சான்று பகரும். தூய்மையான வைகையாற்றங் கரையில் வைகறை நேரத்தில் உள்ளம் முழுதும் உடையவனிடம் வைத்தவராக "வா, வா, கணேசனே!" என்று பாடியவாறு ஒருநாள் நடந்து வந்த சுவாமிகளின் முன் அருட் சோதி ஒன்று தோன்ற, அதை வியந்து நோக்கி அதன் அருகே செல்லச் செல்ல, முன்னவனாரின் முழுத் தோற்றம் கண்டு அப்படியே அணைத்துக் கொண்டார். மின்சாரத்தைத் தொட்டவரைப் போன்று உணர்விழந்து இறைமயமானார். உணர்வு வரப் பெற்றுப் பார்க்கும் போது தழுவிய கைகளுக்குள் விநாயகர் சிலை வடிவமாக இருப்பதையும், தம் கழுத்தில் மாலை சூட்டியிருப்பதையும் கண்டு, 'பரிபூரணர்' என்ற திருநாமம் சூட்டி, அரசு வேம்பு மரங்களின் அடியில் அமர்த்தி வழிபாடு ஆற்றினார். திருக்கோயிலும் அமைந்த சுவாமிகள் தம் அருட் பாடல் மூலம் மதுரை வைகைக் கரையில் இரயில் பாலத்திற்கு வடபுறம், அத் திருக்கோயில் அமைந்துள்ள எல்லையைச் சுட்டிக் காட்டியுள்ளார். அது இன்றும் அவ்விடத்தில் அ/மி மீனாட்சி கோயிலார் மேல் பார்வையில் இருந்து வருகிறது.

மதுரையில் மக்கள் பலர்க்கும் நோயும், பல குறைகளும் தீர்த்தாரேனும் அதனால் மன நிறைவு பெறாத சுவாமிகள் அன்று முதல் இன்று வரை ஆன்றோர் கண்ட நெறிகளை ஒன்று திரட்டி, எல்லா மக்களும், எல்லா உயிர்களும், உய்ய ஒரு நெறியாகத் தரவேண்டும் என்று எண்ணினார்.

தென் பொதிகை மலையாம் குற்றாலத்திற்குச் சென்று செண்பகாதேவி கோயிலுக்கு அருகில் உள்ள ஔவையார் குகையில் பன்னீராண்டு கடுந்தவம் ஆற்றினார். அத்தவத்தை விரிக்கிற் பெருகும் அண்ணலாரின் அகத்திலும் புறத்திலும் பிரணவப் பேரொளி சூழ்ந்து பேணியது. ஞானப் பேரொளி தூய்மை கூட்டியது. அருள் திருவமுதம் சோர்வு நீக்கியது. பரிபூரணர் விசுவரூபக் காட்சி நல்கினார். அவரிடம் அருட்சட்டம் பேணும் அனைத்து உயிர்களுக்கும் முத்தி நலம் அளிக்க வேண்டும் என்ற வரம் பெற்ற பின் தவத்தை இனிதே முடித்துத் தம் உயர் நெறியை தரணிக்கு நல்க இறங்கி வந்து தமிழ்நாடு முழுவதும் உலா வந்து சட்டநெறியைப் பரப்பினார், இரெட்டியப்பட்டி சற்குருநாதர்.

குருநாதர் திருவடி சரணம்.

ஓம்

# விநாயகர் துதி

## (விநாயகர் புராணம்)

1. பந்தம் அகற்றும் அநந்தகுணப்
   பரப்பும் எவன்பால் உதிக்குமோ?
எந்த உலகும் எவனிடத்தில்
   ஈண்டி இருந்து கரக்குமோ?
சந்த மறை ஆ கமங்கலைகள்
   அனைத்தும் எவன்பால் தகவருமோ?
அந்த இறையாம் கணபதியை
   அன்பு கூரத் தொழுகின்றாம்.

2. உலகம் முழுதும் நீக்கமற
   ஒன்றாய் நிற்கும் பொருள் எவன்? அவ்
உலகில் பிறங்கும் விகாரங்கள்
   உறாத மேலாம் ஒளியாவன்?
உலகம் புரியும் வினைப் பயனை
   ஊட்டும் களைகண் எவன்? அந்த
உலக முதலைக் கணபதியை
   உவந்து சரணம் அடைகின்றாம்.

3. இடர்கள் முழுதும் எவனருளால்
   எரிவீழும் பஞ்செசன மாயும்?
தொடரும் உயிர்கள் எவனருளால்
   சுரர்வாழ் பதியும் உறச் செய்யும்?
கடவுள் முதலோர்க்கு ஊறு இன்றிக்
   கருமம் எவனால் முடிவுறும்? அத்
தடவு மருப்புக் கணபதி பொன்
   சரணம் சரணம் அடைகின்றாம்.

4. மூர்த்தி யாகித் தலமாகி
   முந்நீர் கங்கை முதலான
தீர்த்த மாகி அறிந்தறியாத்

திறத்தி னானும் உயிர்குநலம்
ஆர்த்தி நாளும் அறியாமை
அகற்றி அறிவிப் பான்எவன்? அப்
போர்த்த கருணைக் கணபதியைப்
புகழ்ந்து சரணம் அடைகின்றாம்.

5. செய்யும் வினையின் முதல் யாவன்?
செய்யப் படும்அப் பொருள் யாவன்?
ஐயம் இன்றி உளதாகும்
அந்தக் கருமப் பயன் யாவன்?
உய்யும் வினையின் பயன் விளைவில்
ஊட்டி விடுப்பான் எவன்? அந்தப்
பொய்யில் இறையைக் கணபதியைப்
புரிந்து சரணம் அடைகின்றாம்.

6. வேதம் அளந்தும் அறிவரிய
விகிர்தன் யாவன்? விழுத்தகைய
வேத முடிவில் நடம் நவிலும்
விமலன் யாவன்? விளங்குபர
நாத முடிவில் வீற்றிருக்கும்
நாதன் எவன்? எண் குணன் எவன்? அப்
போத முதலைக் கணபதியைப்
புகழ்ந்து சரணம் அடைகின்றாம்.

7. மண்ணின் ஓர் ஐங் குணமாகி
வதிவான் எவன்? நீ ரிடைநான் காய்
நண்ணி அமர்வான் எவன்? தீயில்
மூன்றாய் நவில்வான் எவன்? வளியின்
எண்ணும் இரண்டு குணமாகி
இயைவான் எவன்? வான் இடை ஒன்றாம்
அண்ணல் எவன்? அக் கணபதியை
அன்பிற் சரணம் அடைகின்றாம்.

8. பாச அறிவில் பசு அறிவில்
பற்றற்(கு) அரிய பரன் யாவன்?
பாச அறிவும் பசு அறிவும்

பயிலப் பணிக்கும் அவன் யாவன்?
பாச அறிவும் பசு அறிவும்
பாற்றி மேலாம் அறிவான
தேசன் எவன்? அக் கணபதியைத்
திகழச் சரணம் அடைகின்றாம்.

## அருள்மிகு இரெட்டியப்பட்டி சுவாமிகள் அருளிய விநாயகர் துதி

1. ஐந்து கரத்தாய் அறுமுகற்கு நேர்மூத்தாய்
முந்த உதித்த முதல்வாஎன் - சிந்தை
குடியிருந் தேகாக்கும் கோமான் உனையான்
அடிதொழுதேன் வந்து என்னை ஆள்.

2. நீயே துணையாகி நின்மலமாய் நிற்குணனாய்த்
தாயாகித் தந்தையாய்ச் சற்குருவாய்ச் - சேய்போற்
கருதிஎனை ஆண்ட கணபதியே அல்லால்
வருவதுயார்? சொல்வாய் வழி.

3. சென்மம் எடுத்ததொரு தீவினையோ யான் அறியேன்
கன்மமோ யாதோ கலங்கிடுவேன் - நன்மைபெற
ஆர்சொல்வார் நன்னெறிகள்?அப்பனே நின்அடியார்
சார்வைத் தெரிந்திடவே சாற்று.

4. உலகில் பெரியோராம் உத்தமரைக் காண
நலம்உள் தெரியாத நாயேன்- கலைபலவும்
உற்று(உ)ணர்ந்தார் வாசல் ஒருக்காலும் சென்று அறியாச்
சிற்றறிவேன் நன்மை பெறச் சேர்.

5. இராச விருட் சம்சிவமா யின்வேம்பு சத்தியதாய்
ஆசையுடன் வந்தே அமைந்துவெகு - நேசமுடன்
புத்திரனைப் பெற்றார்இப் பூதலத்தில் எல்லோரும்
முத்திபெற என்றே முதல்.

6. மதுரா புரிவடக்காய் வைகை நதித் தென்பால்
சதுரார் ரயில்பாலந் தன்மேற்காய் எங்கும்
கதித்(து) ஓங்கும் செந்நெல்சூழ் கட்டிடத்தின்
உதித்தாய் என் உள்ளத்(து) உறை.

7. வினையகற்றும் பெருமான்இவ் வேளைவந்து
காத்தருள்வாய்! விமல மூர்த்தி!
உனை அல்லால் வேறு துணை உண்டோ? இவ்
உலகத்தில் ஒருவர் இல்லை.
மனம்உழன்று சுழல்கின்றேன் மாயவலைக்
குள்சிக்கி மதிம யங்கித்
தினமும் யான் அலைவேனோசகிக்கவொண்ணா(து)
உனக்(கு)அபயம் செப்பு வாயே.

8. நாடுவோர்க்(கு) எல்லாம் நாடிய படியே
நல்வரம் கொடுக்கு(ம்)நல் ஈசன்
பாடுவோர் தமக்குப் பாடுதற்(கு) இசைந்த
பயன்களை அளிக்கு(ம்)நல் பதத்தோன்
ஆடுவோர் கூத்தை அறிகின்ற சீலன்
அன்பர்தம் சிந்தையில் புகுந்து
கூடியே உறவாய் வழியது காட்டிக்
குணங்களை உரைக்கு(ம்) மெய்க் குருவே!

9. சீலமிகு செகதீசன் பெற்ற கண்ணே
தெவிட்டாத தொள்ளமுதே தேனே செந்தில்
வேலவர்க்கு முன்பிறந்த சுமுகா ஞான
வித்தகனே விண்ணோர்க்கு மேலாய் உன்னை
ஞாலமுளோர் புகழ்ந்(து) ஏத்தும் விதங்கள் யாவும்
நாவினால் சொலவொண்ணா(து) அருமை என்னே!
கோலமத குஞ்சரமே சதங்கை கொஞ்சக்
கூத்தாடி எனை ஆள வருகு வாயே!

10. அன்னை உமை மனமகிழ்ந்து பயின்ற பாலா
அனைவோர்க்கும் முதல்பொருளே அன்பர் சீலா
நன்னயமாய் நின்பால் வந்(து) அடுத்தேன் என்தன்
நாவதனால் உனைப் பாட அருளிச் செய்தாய்
பன்னு தமிழ்க்(கு) அரசேமெய்ஞ் ஞான மூர்த்தி
பலகலைகள் ஆராயும் பயன்கள் நல்கி
இந்நிலத்தில் உன்மகிமை அறியச் செய்த
இங்கிதத்தை என்சொல்வேன் எம்பி ரானே!

திருப்பாதிரிப் புலியூர்
தவத்திரு ஞானியார் சுவாமிகள் அருளிய
# அருள்மிகு இரெட்டியப்பட்டி
## சற்குருநாதர் துதி

1. திரண்டிடும் அடியார் தீவினை தீர்ப்பான்
திருஉருக் கொண்ட எம் சிவமே!
அரண்தரும் நின்றன் அடிமரை மலரை
அனுதினம் போற்றிசெய் கின்றோம்;
இரண்(டு) அறக் கலந்துஇன் புறஅருள் செய்வாய்
இணைஇலா து(உ)யர்ந்திடு பவனே!
முரண்படல் இல்லா ரெட்டியப் பட்டி
முது நகர் வருகுரு பரனே!
2. அன்புசெய் வார்க்கு வேண்டுவ உவந்தே
அளித்திடு கருணையை உடையோன்;
வன்புசெய் வார்க்கு மறக்கரு ணையினால்
வகைபடு நலம்வரச் செய்வான்;
முன்புபின் பில்லா முதல்வனென்று இன்னும்
முழுமறை முழங்கிடு தலைவன்
நன்மனத் தவர்சூழ் ரெட்டியப் பட்டி
நகர்தனில் குருவென வந்தோன்.
3. தரைபுகழ் வளஞ்சேர் ரெட்டியப் பட்டித்
தனிநகர் வந்(து) அடி யேங்கள்
உரைபுகழ் ஏற்றுஉன் கருணையை அளித்தாய்;
உய்ந்தனம் உய்ந்தனம் என்றும்;
வரையினில் சிறந்த கயிலையை விட்டு
வந்தனை தந்தனை ஞானம்;
குரைகடல் உலகில் கண்ணினிற் கண்ட
குறையிலாத் தெய்வ(ம்)நீ அன்றோ!
4. கண்டிடும் பொருள்கள் பற்பல வாயும்
காணொணாப் பலபொரு ளாயும்
விண்டிட முடியாப் பலபொரு ளாயும்

வேறுமாம் பலபொரு ளாயும்
தொண்டரை ஆளும் குருபர னாயும்
துலங்கிடு சத்தியப் பொருளே!
மண்டலம் புகழும் ரெட்டியப் பட்டி
வளநகர் குருபரா போற்றி !

5. கருத்தினுக் கெட்டாக் கடவுளே உலகில்
கலந்திடும் அடியரைக் காப்பான்
உருக்கொடு வருவர் எனப்பல நூல்கள்
உரைப்பன உண்மையென்(று) அடியேம்
தெரிந்தினத் தவர்சூழ் ரெட்டியப் பட்டித்
திருத்தலம் செழிக்கவந் திடுவோய்
விரிந்திடும் எம்கல் மன(ம்) மிக ஒடுங்க
வெளிவரு குருபரா போற்றி!

## தவத்திரு பாலகவி சுவாமிகள் அருளிய துதி

(பொன்னார் மேனியனே என்ற மெட்டு)

1. கண்ணார் ஒண்மணியே கருணைக் கடலே அடியார்
பண்ணார் பாடல்பல நிதம்பாடி வழுத்திறையே
விண்ணார் தேவர்புகழ் இருடிப்பதி மேவியொளிர்
அண்ணால் ஆரியனே அடியேன்உன் அடைக்கலமே!

2. உழவாய்ப் பல்தொழிலாய் உயர் செல்வமும்ஆனவனே
பழமாய் இன்சுவையாய்ப் பயனாய் ஒளிர்பண்பினனே
முழவார் நல்லிருடி நகர் மேய முழுச் சுடரே
அழகர் அற்புதனே அடியேன் உன் அடைக்கலமே!

3. தூசாய் நல்லுணவாய் துணை யானவனே அடியார்
நேசா நேர்மையனே நிக ரேதுமிலாதவனே
ஈசா நல்இருடிப் பதியின் கண் இலங்கிறையே
ஆசா பாசமிலாய் அடியேன் உன் அடைக்கலமே!

4. இச்சை செயல் அறிவாய் இணைந்தெங்கும் மிளிர்பவனே
நச்சை நேர்மனமும் திருந் தச்செயும் நாயகனே
விச்சை வல்லவர்சூழ் இரு டிப்பதி மேயவனே
அச்சம் தீர்ப்பவனே அடியேன் உன் அடைக்கலமே!

ஓம்

## அருள்மிகு இரெட்டியப் பட்டி

# ஆண்டவர் கவசம்

(அறநெறியண்ணல்)

குருவே துணை

ஐந்து கரத்தோன் அடியினைப் போற்றியே
சந்ததம் காத்திடும் சற்குரு - உந்தப்
புனைந்த கவசமிதைப் போற்றிக் "குருவே
துணை"யெனக் கொள்வீர் துணிந்து.

நூல்

இறைவா வருக ! இரெட்டியப் பட்டி
இறைவா வருக ! எனக்கருள் புரிக !
திருவளர் மதுரைச் செந்தமிழ் வைகைப்
பெருநதிப் பரப்பில் பிள்ளையார் தெய்வம்
பேரொளிப் பிழம்பாய்ப் பின்சிலா வடிவாய்ச்
சீரொளி விளங்கும் திருமிகு கரங்களில்
திகழப் பெற்றவும் திருவடி சரணம்!
புகழ்சேர் அருள்பரி பூரணர் ஆலயம்
ஆங்கு எழுப்பிய ஆண்டவ போற்றி!
ஏங்கும் யார்க்கும் எளியோய் போற்றி!
உன்மலர்ப் பாதம் என்தலை வைத்து
என்றும் அதனை எழிலுறக் காக்க!
நீறணி நெற்றியை நித்தம் காக்க!
ஆறணிச் சடையன் அறுமுகச் செல்வன்
செந்திலோன் மெச்சும் செம்மலே! மகிழ்ந்து

வன்தென் இருநுதல் வளம்பெறக் காக்க!
குறிப்பறி விழிகள் குன்றாது காக்க!
அறிவைப் பெருக்கும் அருஞ்செவி காக்க!
நெறிசெய் நாசியை நித்தம் காக்க!
பொய்யா நாவினைப் பூரண காக்க!
வாயுடன் பற்கள் வலிமை காக்க!
கன்னம் பிடரி கழுத்தும் காக்க!
தொண்டையின் இனிய தொனியைக் காக்க!
உண்மை ஞானம் உணர்வால் பெற்றோய்!
என்தன் இருதோள் வன்மை காக்க!
புகழ்தரும் மார்பைப் பொலிவுறக் காக்க!
திகழும் வயிற்றைத் திடம் பெறக் காக்க!
தொண்டுசெய் கரங்கள், துவளா முதுகு,
ஆண்பெண் இனக்குறி அனைத்தும் காக்க!
விருந்தினை ஓம்பும் வீர பத்திரர்
அருமைத் துணைவி ஆவுடை யம்மாள்
ஈன்ற செல்வமே! இணையில் துணையே!
ஆன்ற பெருமை அனைத்தின் உருவே!
ஆண்டவன் அருளால் ஆடிப் பாடிய
சுப்பிர மணியெனும் சுந்தரப் பெயரோய்!
இப்புவி வியக்க இறையருள் பெற்று
ஊர்விழா ஒன்றை ஊறுசெய் மேகம்
ஆர்க்க ஓர்சொலால் அடக்கிய தேவே!
என்தன் இடுப்பின் வன்மை காக்க!
முன்பின் தொடைகள், முழங்கால், பாதம்
விரல்கள், குதிக்கால் தரமாய்க் காக்க!
கரவா நெஞ்சைக் காக்க! காக்க!
மதுராம் பிகையாள் மனங்கொள அன்று
மதுரை நகரில் முகம்மதி யர்கடை
ஒன்றின் கணக்கராய் உழைத்த போழ்து
ஒன்றிய மனத்தராய் ஒளிநெறி கண்டோய்!
இல்லறத் துறவியாய் யாவர்க்கும் சாமியாய்

நல்லற வாழ்வில் நாளும் நின்றோய்!
வெப்பொடு குளிரால் மெய்யுறு நோய்கள்,
உப்புசம், வாதம், உலைச்சல், பித்தம்,
குன்மம், சூலை, குடைச்சல், சிலந்தி
என்புசார் நோய்கள் ஒன்றாது காக்க!
கண்நோய், பல்நோய், காய்ச்சல், தலையிடி,
கண்ட மாலை, கரைப்பான், சிரங்கு,
சூழ்ந்து பற்றும் தோலுறு நோய்கள்
ஏதும் அணுகா(து) என்தனைக் காக்க!
செண்பகா அருவி அண்மைக் குகையுள்
செண்பகா தேவி திருவருள் துணையால்
உண்ணா(து) இருந்தும் உறங்கா(து) இருந்தும்
பன்னெடு ஆண்டுகள் பயின்ற தவத்தால்
மன்னுயிர் வளம்பெற நன்னெறி கண்டோய்!
நாளும் கோளும் நலமே செயவும்,
வாழும் உடலை வருத்தும் பூத
மைந்தும், மின்னும், இடியும் ஏதும்
என்றும் என்னை எவ்வாது காக்க!
துன்பம் துடைக்கும் தூமணி விளக்கே!
எட்டுத் திக்கில் எதிலும் தீங்கு
கிட்டாது காக்க! கிருபா கரனே!
மேலும் நடுவும் கீழும் காக்க!
நாளும் இரவும் நலமாய்க் காக்க!
பகைவர் எய்தும் படைக் கலன் யாவும்
புகைத்துப் போக்கிப் புண்ணியா காக்க!
மண்ணில் நீரில் மலையில் பிலத்துள்
விண்ணில் தீயில் என்றும் காக்க!
நடக்கையில் இருக்கையில் கிடைக்கையில் நிட்டையில்
திடமாய் இருந்திடத் தேவே காக்க!
பேய்கள் பூதம் பில்லி சூன்யம்
தீயன யாதும் தீண்டாது காக்க!
நீரில் வாழ்வன நிலத்தில் ஊர்வன

கூரிய பல், நகம், கொம்போ உடைய
மாக்கள், மற்றும் வானில் பறப்பன
தாக்க வந்திடில் தடுத்துக் காக்க!
வருமுன் காக்கும் வகைதனை உணர்த்தி
ஒருவகைத் தீங்கும் உறாது காக்க!
ஏற்ற பணிகளை இடையூ றின்றி
ஆற்றும் திறனை அருளிக் காக்க!
சட்டநெறி அருளிய தனிப்பெருந் தேவே!
சட்டநெறி தவறினும் தகையுடன் காக்க!
உம்மை யாரும் உளத்துள் நினைந்து
செம்மை யாகத் திருநீறு துளசி
மருந்தெனக் கொண்டால் மன்னிய நோய்கள்
வருத்தாது விரைவில் மறைந்திட அருளும்
குருவே சரணம் ! குருவே சரணம்!
கருணைக் கடலே கண்ணின் மணியே !
எண்ணிய கருமம் இனிதே முடிய
நண்ணிய பேர்க்கு நல்வழி காட்ட
தினமும் அன்பரைத் தேடிச் சென்று
கனவில் உணர்த்தும் கற்பக தருவே!
குன்றாச் செல்வம் என்றும் பொங்க
அன்புடன் அருளும் ஆண்டவா போற்றி!
பார்புகழ் இரெட்டியப் பட்டியில் அன்னை
தேர்ந்து ஈன்ற திருவிடம் அறிந்தே
ஆங்கே நீவிர் அடங்கிச் சோதியாய்
நீங்காது பொழியும் நின்னருள் கண்டே
அன்பர் கூடி ஆலயம் அமைக்க
இன்னருள் சுரக்கும் இறைவனாய் அமர்ந்தோய்
சரணம்! சரணம்! சற்குரு தேவே!
சரணம்! சரணம்! சற்குரு தேவே!

(ஆண்டவர் கவசம் நிறைவு)

## பாராயணப் பயன்

ஆண்டவர் கவசம் நாளும் மும்முறை
அன்புடன் ஓதி உணர்ந்து
வேண்டவே தீர்ந்திடும் உற்ற நோயெலாம்
வெயில்காண் பனித்துளி போன்றே;
நீண்ட ஆயுளும் சீரும் தந்திடும்;
நினைத்த நல்லவை கூடிடும்;
தீண்ட அஞ்சிடும் தீயன எல்லாம்;
திக்கெலாம் பரவிடும் புகழுமே!

# அருள்மிகு இரெட்டியப்பட்டி ஆண்டவர் கோயில்

## இரெட்டியப்பட்டி

நாகலாபுரம், நெல்லை மாவட்டம்.

(மதுரை அருப்புக்கோட்டை புதூர் நாகலாபுரம் வழிச் செல்லும் பேருந்துகளில் செல்லலாம்)

### சிறப்பு விழாக்கள்

ஜயந்தி - புரட்டாசி மாதம் இரேவதி நாள்.
குருபூசை - மார்கழி மாதம் அனுட நாள்.

# ஆண்டவர் அருளிய சட்டநெறி

1. தண்ணீரில் விடியுமுன் குளித்தல் வேண்டும்
எப்பொழுதும் தலைநனையக் குளித்தல் வேண்டும்
தண்ணீரே எப்பொழுதும் குடித்தல் வேண்டும்
வெந்நீரை எதற்கும் விலக்கல் வேண்டும்.

2. தெய்வம் ஒன்றே என்றறிதல் வேண்டும்
காலை மாலை இறைவனைத் தொழுதல் வேண்டும்
ஞானநிட்டை நாளும் பயிலல் வேண்டும்
வெள்ளிதோறும் விரதம் இருத்தல் வேண்டும்.

3. மரக்கறியே எப்பொழுதும் உண்ணல் வேண்டும்
புலாலை உண்ணாது இருத்தல் வேண்டும்

4. நோயுற்றால் காலை மாலை குளித்தல் வேண்டும்
குளித்ததும் திருநீறு துளசி உட்கொள வேண்டும்
மருந்தினை அருந்தாது இருத்தல் வேண்டும்

5. பஞ்சமா பாதகம் செய்யாதிருத்தல் வேண்டும்

6. சோதிடம் மந்திரம் தவிர்த்தல் வேண்டும்

7. வழக்காட நீதிமன்றம் செல்லாதிருத்தல் வேண்டும்.

8. கொடுத்தால் செய்வேன் எனும் பிரார்த்தனை தவிர்த்தல் வேண்டும்.

9. இறந்தோர்க்கு இரங்காதிருத்தல் வேண்டும்.

10. உடல் பொருள் ஆவி அனைத்தும் 'உனக்கே அர்ப்பணம்' என உடையார் திருவடியில் ஒப்படைத்து வாழ்தல் வேண்டும்

ஆண்டவர் திருவடி சரணம்

மங்கலம் பொங்குக

